# சௌரம்

(சூரிய வழிபாடு)




தொகுப்பாசிரியர்
"செந்தில் துறவி"



சாஸ்தா பதிப்பகம்
(Sastha Publications)

50, கிழக்கு ரதவீதி,
திருச்செந்தூர்.

4/1, போயிஸ் சாலை,
சென்னை-18.

மூன்றாம் பதிப்பு : மே மீ 1969
உரிமை :
சாஸ்தா பதிப்பகம்
(Sastha Publications)
MADRAS-53

விலை ரூ. 1-25

---

எமது ஓர் ஆண்டு பிரசுரத் திட்டத்தில் 12 பக்தி நூல்கள் வெளியாகின்றன. வாசக நேயர்களின் நலனை முன்னிட்டு வருட சந்தா ரூ. 18/- என்று நிர்ணயித்துள்ளோம். சந்தாதாரராகச் சேரும் நேயர்களுக்கு கீழ்க்கண்ட 12 நூல்களும் அவ்வப்போது தபால் செலவின்றி அனுப்பப்படும்.

1. ஐயப்பனோடு ஐம்பது நாள்
2. முருகன் தலம் முப்பது
3. காணுபத்யம்
4. கௌமாரம்
5. சாக்தம்
6. சைவம
7. வைஷ்ணவம்
8. சௌரம்
9. திருமால் திருப்பதிகள்
10. பராசக்தி படிவம்
11. கேரளம் கண்டேன் !
12. ஐம்பெரு விழாக்கள்

சந்தா தொகை அனுப்ப வேண்டிய விலாசம்

SASTHA PUBLICATIONS

(சாஸ்தா பதிப்பகம்)

50, கிழக்கு ரத வீதி, திருச்செந்தூர்.

அல்லது

4/1, போயிஸ் சாலை, சென்னை-18.

---

பி. வி. கே. பிரஸ், சென்னை.

## ஸூர்ய ஸ்துதி

த்யாயேத் சூர்யமனந்த கோடி கிரணம்
தேஜோ மயம் பாஸ்கரம்
பக்தானு மபயப்ரதம் தினகரம் ஜ்யோதிர்மயம்
சங்கரம்
ஆதித்யம் ஜகதீசம் அச்யுதம் அஜம்
த்ரைலோக்ய சூடாமணிம்
பக்தாபீஷ்ட வரப்ரதம் தினமணிம் மார்த்
தாண்ட மாத்யம் சுபம்
த்விபுஜம் பத்ம ஹஸ்தம் ச வரதம் முகுடாங்
விதம்
த்யாயேத் திவாகரம் தேவம் ஸர்வாபீஷ்ட
பலப்ரதம்
பத்மாஸன: பத்மகர: பத்மகர்ப்ப ஸமத்யுதி:
ஸப்தாஸ் வரத ஸம்ஸ்தஸ்ச த்விபுஜ: ஸ்யாத்
ஸதாரவி:
ஜபாகுஸும ஸங்காஸம் காச்யபேயம்
மஹாத்யுதிம்
தமோரிம் ஸர்வபாபக்னம் ப்ரணதோஸ்மி
திவாகரம்
ஸோணும் போருஹ ஸுஸ்திதம் த்ரிநயனம்
வேதத்ரயீ விக்ரஹம்
தானும் போஜ சுகா பயானி தததம் ஹஸ்தை:
ப்ரவாலப்பரம்
கேயூராங்கத ஹார கங்கண தரம் கர்ணோல்ல
ஸத் குண்டலம்
லோகோபத்தி விபத்தி பாலன கரம் ஸூர்யம்
குணப்திம் பஜே

# குரு ஸ்துதி

விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே
மஹிதோப நிஷத் கதிதார்த நிதே ।
ஹ்ருதயே கலயே விமலம் சரணம்
பவசங்கர தேசிகமே சரணம் ॥ 1

கருணா வருணாலய பாலயமாம்
பவ ஸாகர து:க விதூ நஹ்ருதம் ।
ரசிதாகில தர்சன தத்வவிதம்
பவசங்கர தேசிகமே சரணம் ॥ 2

பவதா ஜனதா ஸுஹிதா பவிதா
நிஜபோத விசாரண சாருமதே ।
கலயேச்வர ஜீவ விவேகவிதம்
பவசங்கர தேசிகமே சரணம் ॥ 3

பவ ஏவ பவானிதி மேநிதராம்
ஸமஜாயத சேதஸி கௌதுகிதா ।
மமவாரய மோஹ மஹாஜலதிம்
பவசங்கர தேசிகமே சரணம் ॥ 4

ஸுக்ருதே திக்ருதே பஹுதா பவதோ
பவிதாஸம தர்சன லாலஸதா |
அதிதீனமிமம் பரிபாலயமாம்
பவசங்கர தேசிகமே சரணம் || 5

ஜகதீ மவிதும் கலிதாக்ருதயோ
விசரந்தி மஹாமஹஸ ச்சலத: |
அஹிமாம்சு ரிவாத்ர விபாஸி புரோ
பவசங்கர தேசிகமே சரணம் || 6

குருபுங்கவ புங்கவ கேதநதே
ஸமதாமயதாம் நஹி கோபிஸுதி: |
சரணாகத வத்ஸல தத்வநிதே
பவசங்கர தேசிகமே சரணம் || 7

விதிதா ந மயா விசதை ககலா
ந ச கிஞ்சன காஞ்சன மஸ்தி குரோ |
த்ருதமேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம்
பவசங்கர தேசிகமே சரணம் || 8

தோடகாசார்யாஷ்டகம்

# நவக்ரஹ க்ஷேத்ரங்கள்

சட்ட திட்டங்களை ஆராய்ந்து தீர்ப்புக்கூற கீழ்க்கோர்ட், நடுக்கோர்ட், மேல்கோர்ட் என்று இருப்பது போல், சமூகம் நல்வாழ்வு வாழ தெய்விக விஷயங்களிலும் சில படிகள் உள்ளன. ஒன்றையொன்று ஆதாரமாகக் கொண்ட உண்மைகள் பலவற்றைப் பிரகடனம் செய்வதில் முதல் இடம் வகிப்பது இந்த நவக்ரஹ க்ஷேத்ரங்கள். புராதனமாயுள்ள ஒரு சுவடிக்ரந்தத்தில் கூறப்பட்டுள்ள இந்த உண்மைகள் நேயர்களின் நலனை முன்னிட்டுப் பிரசுரமாகியுள்ளன.

| கிரஹம் | க்ஷேத்திரம் | மூர்த்தி |
|---|---|---|
| சூரியன் | சூரியனார் கோயில் (தஞ்சை மாவட்டம் ஆடுதுறை அருகில்) | ஸ்ரீ சிவசூர்ய நாராயண ஸ்வாமி |
| சந்திரன் | திருப்பதி | ஸ்ரீ வேங்கடாசலபதி |
| செவ்வாய் | பழநி | ஸ்ரீ தண்டாயுதபாணி |
| புதன் | மதுரை | ஸ்ரீ சொக்கநாதர் |
| குரு | திருச்செந்தூர் | ஸ்ரீ பால ஸுப்ரஹ்மண்யம் |
| சுக்கிரன் | ஸ்ரீரங்கம் | ஸ்ரீ ரங்கநாதர் |
| சனி | திருநள்ளாறு (காரைக்கால் அருகில்) | ஸ்ரீ சனி பகவான் |
| ராகு, கேது | காளஹஸ்தி | ஸ்ரீ காளஹஸ்தீச்வரர் |

# நவக்ரஹ காயத்ரீ

**கிரஹம்**

| | |
|---|---|
| **சூரியன்** | அச்வ த்வஜாய வித்மஹே,<br>பாச ஹஸ்தாய தீமஹி ।<br>தந்நஸ் ஸூர்ய: ப்ரசோதயாத் ॥ 1 |
| **சந்திரன்** | பத்ம த்வஜாய வித்மஹே,<br>ஹேம ரூபாய தீமஹி ।<br>தந்நஸ் ஸோம: ப்ரசோதயாத் ॥ 2 |
| **செவ்வாய்** | வீர த்வாஜய வித்மஹே,<br>விக்ந ஹஸ்தாய தீமஹி ।<br>தந்நோ பௌம: ப்ரசோதயாத் ॥ 3 |
| **புதன்** | கஜ த்வஜாய வித்மஹே,<br>சுக ஹஸ்தாய தீமஹி ।<br>தந்நோ புத: ப்ரசோதயாத் ॥ 4 |
| **குரு** | வ்ருஷப த்வஜாய வித்மஹே,<br>க்ருணி ஹஸ்தாய தீமஹி ।<br>தந்நோ குரு: ப்ரசோதயாத ॥ 5 |
| **சுக்கிரன்** | அச்வ த்வஜாய வித்மஹே,<br>தநுர் ஹஸ்தாய தீமஹி ।<br>தந்ந: சுக்ர: ப்ரசோதயாத் ॥ 6 |
| **சனி** | காக த்வஜாய வித்மஹே,<br>கட்க ஹஸ்தாய தீமஹி ।<br>தந்நோ மந்த: ப்ரசோதயாத் ॥ 7 |
| **ராகு** | நகத்வஜாய வித்மஹே,<br>பத்மஹஸ்தாய தீமஹி ।<br>தந்நோ ராஹு: ப்ரசோதயாத் ॥ 8 |
| **கேது** | அச்வ த்வஜாய வித்மஹே,<br>சூலஹஸ்தாய தீமஹி ।<br>தந்ந: கேது: ப்ரசோதயாத் ॥ 9 |

# பூரணப் பொலிவு

## "மதி ஒளி"

உதயக் கதிரே ! உயிரே போற்றி !
சிதறும் சுடரின் செழிப்பே போற்றி !
ஞாயிறு போற்றி ! நாயக போற்றி !
மாயிருள் அகற்றும் மருந்தே போற்றி !

மயக்கம் நீக்கும் வரமே போற்றி !
வியக்கும் அருளின் விழுதே போற்றி !
காற்றே போற்றி ! கனலே போற்றி !
மாற்றி வழங்கும் மழையே போற்றி !

புல் முதல் புவனம் சுரயப் புதுமை
நல்கும் பொலிவின் நலனே போற்றி !
சக்தி கொடுக்கும் சத்திய போற்றி !
பக்தியின் நெஞ்சில் படர்ந்தாய் போற்றி !

அறிவின் தெளிவே அழகே போற்றி !
திருவே போற்றி ! திறனே போற்றி !
அழியாப் பொருளே அமுதே போற்றி !
விழியாய் ஒளியாய் விளைந்தாய் போற்றி !

அரியே போற்றி ! அயனே போற்றி !
அரனே போற்றி ! அன்னாய் போற்றி !
ஞான ஒளியே நம்பி போற்றி !
மோனத் துதித்த முதலே போற்றி !

காணற் கரிய கருணை போற்றி !
பேணற் கரிய பெரும போற்றி !
காலச் சுழலின் கருத்தே போற்றி !
மூலக் கருவின் மூச்சே போற்றி !

பணியில் நிறையும் பலனே போற்றி !
துணிவின் உணர்வில் தொடர்வாய் போற்றி !
வையம் வானம் அளந்தாய் போற்றி !
செய்யும் வினையின் சிறப்பே போற்றி !

பொய்ம்மை அழிக்கும் புகழே போற்றி !
மெய்யே போற்றி ! வேதா போற்றி !
உய்யும் வழிக்கோர் உறவே போற்றி !
நெய்யும் இனிமை நினைவே போற்றி !

இந்திர போற்றி ! இயம போற்றி !
சந்திர சூரிய தேவனே போற்றி !
ஏழு புரவியில் அமர்ந்தே உலகைச்
சூழும் கிரணமாய்ச் சுழல்வாய் போற்றி !

அதிதி தேவியர் அருமைக் கேயவர்
உதரம் துலங்க உதித்தோய் போற்றி !
பனியின் பகைவ பரம போற்றி !
சினத்தில் தீயென தகிப்பாய் போற்றி !

ஊழியில் அழியும் உயிரைக் காத்து
வாழ வைக்கும் வள்ளால் போற்றி !
மூவேதத்தின் கரைகண் டுணர்ந்த
தேவே போற்றி ! சீலா போற்றி !

பிங்கள நிறத்தின் பிரபுவே போற்றி !
மங்களம் நல்கும் மறையே போற்றி !
இருபத் தேழு விண்மீன் தனக்கும்
விரியும் ஒளியை விதைத்தாய் போற்றி !

வெற்றியின் வடிவே வேந்தே போற்றி !
மற்றோர் நிகரிலா மாண்பே போற்றி !
தாமரை மலரச் செய்தவா போற்றி !
சாமியே போற்றி ! சகலனே போற்றி !

பொன்னின் ஒளியாய்த் திகழ்வோய் போற்றி !
தன்னிலே அனைத்தும் தரித்தாய் போற்றி
காரண போற்றி ! காரிய போற்றி !
பூரண மான பொலிவே போற்றி !



# பரம்பொருள்

" ஆதித்ய வர்ணம் தமஸப் பரஸ்தாத் "

என்று கோஷமிடும் நமது வேதம், சூரியனைப் போன்று ஒளிமயமானதாயும் (அஞ்ஞான) இருளுக்கு அப்பாற்பட்டதாயும் பரம்பொருளை வருணிக்கிறது. ஆகாசத்தில் வெகு தூரத்தில் உள்ள அருந்ததி நக்ஷத்ரத்தைக் காட்டுவதற்கு முன், பல நக்ஷத்ரங்களைக் காட்டி அதன் பிறகு அருந்ததியைச் சுட்டிக்காட்டுவதுபோலும், மரங்களைக் காட்டிப் பிறையைச் சுட்டிக் காட்டுவது போலும், கருத்துக்கு மட்டுமே புலப்படும் சூக்ஷ்ம தத்வ விஷயத்தைக் கண்ணுக்குப் புலப்படும் உடலை வைத்தே மூதாதையர் வலியுறுத்தினர்.

" தாலத்தின் மரங்கள் காட்டி தனிப்பிறை
காட்டுவார்போல்
ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி
காட்டுவார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபமான
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கினாரே"

(கைவல்ய நவநீதம்)

இந்தக் கருத்தையொட்டிப் பரம்பொருளை வணங்கும் போது உதாரணத்திற்கு முனிவர்கள் சூரியனையே உபமானமாகக் கூறி வந்துள்ளனர் என்பதை வேத வாக்கினால் அறிகிறோம். இறைவனை வருணிக்கையிலும் ஒளிமயமானதை விளக்குகையிலும், சூரியனையே உதாரணமாக எடுத்துக் கையாண்டுள்ளனர்.

" பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு ஒவற
இமைக்குஞ் சேண் விளங் கவிரொளி "

(திருமுருகாற்றுப்படை)

" பருதி பலவும் எழுந்து சுடற் பாலித்தாற்
போல குலவு மகரக் குழை "

(கலிவெண்பா)

" இளம் பருதி நூறாயிரங் கோடிபோல
வளந் தரு தெய்வீக வடிவம் " (கலிவெண்பா)

அருண கிரண ஜாலே : (அம்பாள் துதி)

த்யானம் செய்யும் அடியார் மனக்கண்ணில் பலவாகக் காட்சி தரும பரமபொருள் ஒளிவடிவாகக காட்சியருளு கின்றபடியால, பரமபொருளின் ஒளியின் முன் அஞ்ஞானம் என்ற மாயை அகலுகிறது. அதுபோல் சூரிய வெளிச் சத்தில புறத்தேயுள்ள இருட்டு அகலுகிறது. புறம் அகத்தில் தோற்றமே தவிர வேறில்லே. ஆகவே, புறததே யும் காணும ப்ரத்யட்ச தெய்வம் என்று 'சூரியனை'க் கொண்டாடினர். ஆராய்ச்சிக்கு எட்டாமலும், நியதிக்குப் புறம்பின்றியும், ஒழுங்குடன் ஒரே கதியில் இயங்கிவரும் ஆதவனைக கண் காணும் தெய்வமாகத் தொழுது வருவதில் வியப்பு ஏதுமில்லே.

'' அலங்காரப் பிரியோ விஷ்ணு :; அபிஷேகப்
ப்ரியோ சிவ; நமஸ்காரப் ப்ரியோ பானு: ''

என்றபடி ஸமஸ்த ஜீவராசிகளும் உறக்கம் கழித்து விழிபபெயதி மன மகிழவுடன் பகற்பொழுதை உற்சாகத் தோடு ஆரம்பிககக காரண வானன ''பகலவனை''ப் பிரார்த் தித்து நமஸகரிப்பது நம் மரபு.

" அஸௌ யஸ்தாம்ரோ அருண உத 'பப்ரு'
ஸுமங்கல: "

'அதோ தாமிர வர்ணனாய், ஆடு மாடு மேய்ப்பவர் முதல் சகல ஜீவராசிகளும காணும் வண்ணம் மங்களகரமாய் ஊர்நது செல்கிறான். அவனே 'பப்ரு' எனப்படும் சூரியன' என்று ஸ்ரீ ருத்ரம் வர்ணிக்கிறது.

இந்து மதம தொன்று தொட்டுப் புகுத்தி வந்த சமய போதனைகள், கருததுககு மட்டுமே புலப்படும அரூபியான, ஒளிமயமான, எஙகும, எக்காலத்தும நீக்கமற நிறைந்து நிற்கும் பரமபொருளேயே மையப் புள்ளியாகக் கொண்டு ஹிந்து சமூகத்தை ஒன்றுபடுத்தி வந்துள்ளது.

ஒளியுள்ளவற்றுள் ஒளியாக நிற்பது ஆத்மா இது அறிவுமயமாக நிற்கின்றது சிலர் இந்த பரதத்துவத்தை த்யானத்தின் மூலம் காண்கிறார்கள்: சிலர் கர்மத்தின் மூலம் காண்கிறார்கள்· சிலர் மனத்தினுல் அறிகிறார்கள்: சிலர் கேட்டறிந்த வேதாந்த உண்மைகளைத் திடமாக நம்பி ஜனன, மரண துன்பத்தைக் கடக்கிறார்கள்.

இப்படி நம் உடலிலே வதியும் பரமனை எப்படியும் அறிய வேண்டுவதே மனிதனின் தலையாய கடன். நிஷ்காம்யமாக கர்மத்தைச் செய்து மனத்தை இழுக்கும் இன்பத்தை பகவத் உபாசனையால் அகற்றி ஸௌர்ய மண்டலத்திற்குள் அந்தர் யாமியாக இருப்பவரும், நம்முள் இருப்பவருமான அந்த பரம ப்ரும்மத்தை அறியவே பிள்ளைப் பிராயம் தொடங்கி சமுதாயம் முயற்சி செய்து வருகிறது.

கண்ணில் படும் பரம்பொருளாய்த் திகழும் சூரியன், கருத்தில் ஏதோ ஒரு உருவில் பதிந்து விடுகிறான். அவனு டைய ஒற்றைச் சக்கர ரதமும், ஏழு குதிரைகளும், பத்னி யரும் நமக்குத் தெரிவதில்லை. கண்ணைப் பறிக்கும் ஒளிமய மான சூரியனைப் புராணங்கள் ஆராய்ந்து உருவகப்படுத்தி யிருக்கின்றன. அந்த உருவத்தை நாம் காணும் சூரியனில் நாம் தேடிப்பார்க்க விழைவதில்லை. ஏனெனில் இயற்கை என்பது ஒரு புதிர்: அதற்கு விடை தேடப் பல கோடி ஜன்மாக்கள் எடுக்க வேண்டும் இயற்கையே பரம் பொருள் என்று பொதுவாக நாம் கொண்டாடுவதே விவேகம் இக் கருத்தினரின் கூட்டமே உலக சமுதாயம். சூரியன் என்ற பரம்பொருள்—அம்சத்தைக் காணக் கொடுத்துவைத்த பாக்கியசாலிகளாகவே நாம் நம்மைக் கருதி, எல்லா வழி பாடுகளுக்குமேல் பிரத்யட்சப் பரம்பொருளாக ஆதவனைத் துதிக்கிறோம்.

இந்த பர தத்துவத்தை ஸ்ரீ ஆதி சங்கரர் காணபத்யம், கௌமாரம், சாக்தம, சைவம், வைஷ்ணவம் என்று உருவ வழிபாட்டு முறைகளை வகுத்து சமுதாயம் உய்ய வகை செய்து, கடைசியாக சகல ஜீவனும் பார்க்கும்படியான தெய்வத்தை உருவும் அருவும் ஆனவனை, ஒளிமய மானவனை, எவன் சந்நிதானத்தில் சகல ஜீவராசிகளும் இயங்கி, தத்தம் கடமைகளை ஆற்றுகின்றதோ அந்த ஸர்வ வல்லமை பொருந்தியவனை வழிபடும் மங்கள மார்க்கமாக சூரிய உபாசனையை வகுத்து நமக்கு அளித்துள்ளார் அதுவே 'சௌரம்' எனப்படும்.

# சௌரம்

மூதாதையர்களான நமது ரிஷிச்ரேஷ்டர்கள், தத்வ ஞானிகள் அரூபமான அக்னி, வருணன், (மித்ரன்) சூரியன் முதலியவற்றை தியானம் செய்து வந்துள்ளனர் என்பதை வேத, இதிகாச, புராண வாயிலாக நாம அறிய முடிகிறது. நமது பழம்பெரும் பொக்கிஷமான 'எழுதாக்கிளவி' யான வேதத்தில் 'அருண காடகம்' என்று சூரியனைப் பற்றிய வர்ணனை தனியாக உள்ளது.

"பரந்ததாயும், சர்வ சாக்ஷியாயும், அஞ்ஞான இருளைப் போக்குவதாயும், தேச, கால, வர்த்தமானததால் பாதிக்கப் படாததாயும நிறைந்து நிற்பது சூரியன். பரதத்வத்தை ஒப்பிடவும், சற்றே உணரவும் உதவுவது சூரியன்! அதனால் முதல் உபாசனையாக மனித வர்க்கம் 'சூரியதேவனையே' ஏற்று, அன்றும் இன்றும் என்றும் ஆராதித்து வருகிறது.

'ஆதித்யம் அம்பிகாம் விஷ்ணும் கணநாதம் மஹேச் வரம்' என்று ஸ்தோத்ரத்தில் முதலில் 'ஆதித்யம்' என்றே ஆரம்பிக்கப்படுகிறது. உலகில், ஆரம்பம் எதற்குமே சூரியன் தான் காரணம். சூரியனின்றி எதுவும் இயங்க முடியாது, ஜீவராசிகள் அனைத்தும் கர்மவினையால் ஏற் பட்டுள்ள பிறப்பை உலகில் கழித்து நற்கதியடைய சூரிய னின் கதிர்கள் அவசியமானது.

"நம: ஸவித்ரே ஜகதேக சக்ஷுஷே
ஜகத் ப்ரஸூதி, ஸ்திதி, நாச ஹேதவே
த்ரியீ மயாய, த்ரிகுணாத்ம தாரிணே
விரிஞ்சி நாராயண சங்கராத்மனே!

'ஸந்தியா வந்தனம்' என்று காலங்கள் சந்திக்கும் நேரத்தில் —பகலும் இரவும் சேரும நேரம-சூரிய தேவனை உபாசிப்பது நமது வழக்கமாயிருந்து வருவதறகுக் காரணம், சூரிய தேவ னுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதே.

"வேதானும் ஸாமவேதோஸ்மி" என்றும்
"ஆதித்யானும்: அஹம் விஷ்ணு: ஜ்யோதிஷாம்
ரவிரம்சுமான்" என்று

நூல்களில் ப்ரதானமாக விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதையில், ஸ்ரீ கிருஷ்ணபகவான் 'வேதசாஸ்த்ரத்தில் நான் ஸாம வேதமாகவும், பிரகாசிக்கும் பொருள்களில் சூரியனாகவும் உள்ளேன்' என்று கூறுகிறார்.

இப்படிப் புகழ் வாய்ந்த ஸாமவேதத்தின் 'சுக்ரியம்' என்ற வேதகான ஸாமாக்களில் பெரும்பான்மை சூரியனைப் பற்றியே கூறுகிறது. 'அருணகாடகம்' என்று யஜுர் வேதத்தில் உள்ள பகுதியும் சூரியனைப் பற்றியதுதான். ரிக் வேதமும் உதய ஜோதியைப் பலவாறு வர்ணித்துள்ளது.

"ந காயத்ரியா பரம் ஜப்யம்"

மந்திரங்களில் சிறந்தது காயத்ரீயாகும். இந்தக் காயத்ரியும் சூரிய உபாசனையின் சிறப்பையே காட்டுகிறது.

இந்த காயத்ரீயின் அந்தர் தேவதா ஸ்வரூபமாக 'ஸவித்ரு' என்ற சூரிய தேவனின் திவ்ய ஜ்யோதியையே தியானம் செய்யப்படுகிறது.

'எந்த தேவன் உலகின்கண் உள்ள இருட்டை நீக்கி, ஒளியை பிரகாசிக்கச் செய்கின்றாரோ அவன் நம் புத்தியைப் பிரகாசிக்கச் செய்யட்டும்' என்பதே காயத்ரீ மஹா மந்திரத்தின் பொதுவான கருத்து

இந்த புத்தி விளங்கும் இடம் சந்திரமண்டலம் எனப்படும் நமது உடலின் சிரஸ் பாகமாகும். கழுத்துக்குக் கீழ் நாபி வரை சூரிய மண்டலமாகவும், வயிற்றுப் பகுதி அக்னி மண்டலமாகவும் வகுத்து இவ்வுடலையும் 'மூன்று' பகுதிகளாக யோக சாஸ்திரத்தில் கூறியுள்ளனர். சந்திரன் தனியே பிரகாசிக்காமல் சூரியனின் ஒளியால் பிரகாசிக்கிறான். ஆம். இதயக் குகையில் சுயம் பிரகாசியான பரமாத்மாவின் பிரகாசத்தை கிரஹித்துக் கொண்டால்தான் புத்தி பிரகாசிக்கிறது ஆகவே (ஹ்ருதயோபாசனை தியான மலரால் அர்ச்சித்து). 'ஹ்ருதயோபாசனை' என்ற சூரிய நாடியிலேயே நமது மனத்தை இருத்தி ஒருமுகமானால், சுயம் பிரகாசியான பரமாத்மா தரிசனம் கிட்டும் என்று வலியுறுத்தப்பட்டுள்ளது.

அப்பர் சுவாமிகளும்:—

"அருக்கன் பாதம் வணங்குவார் அந்தியில்
அருக்கன் ஆவான் அரனுரு வல்லனோ
இருக்கு நான் மறை ஈசனையே தொழும்
கருத்தினை நினையார் கன்மனவரே."

என்று அந்த 'அருக்கனின்' உபாசனைப் பெருமையைப் பாடியுள்ளார்.

"யம் பாலயஸி தர்மம் த்வம் த்ருத்யேன நியமேனச
ஸவை ராகவ ஸார்த்தூல தர்ம்ஸ்த்வம் அபிரக்ஷது"

என்று கோசலை ஈன்ற, தர்மம் காத்த தர்மஸ்வரூபியான இராமபிரானே 'பகலவனை' உபாசித்திருக்கிறார் என்பதைப் பார்க்கும் போது, சூரிய உபாசனையின் பழமையும் பெருமையும் சொல்லாமல் விளங்குகிறது.

"ஸூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷஸ்ச"

"அந்த சூரியனே தாவர ஜங்கமப் பொருள் அனைத்துக்கும் ஆத்மா" என்று கூறப்படுகிறது.

---

## ஒளியும் பேரொளியும்

'ஒளியில் ஒளியாகி' 'மற்று இரவு பகல் அற்ற இடம் ஒப்புவித்து எனை இருத்தி' என்று பகழிக்கூத்தர் ஒளியில் ஒளியாகிய இறைவன் புகழ் பாடியது போல், ஒளியையும் தன் ஒளியினால் மறைத்து தானே ஒருவனே ஆதி ஒளியாய்த் திகழ்ந்து வானிடை கனை போல் நின்று, அண்டமெங்கும் வெம்மையைப் பரப்பி, பச்சை பயிரினங்களுக்கு உணவும் உயிரும் ஊட்டி, மேகத்தை உண்டாக்கி குளுமையாம் மழையை பொழிவித்து உயர்வினங்களை வாழ்விக்கும் கருணைக் கடலாகச் சூரியன் திகழ்கிறான். இந்த நிலையில் ஆதவன் ஒரே சமயத்தில் ஒளியாகவும் பேரொளியாகவும் விளங்குகிறான்.

ரிக்வேதத்தில் :

" ஹம்ஸ; சுசிஷத்; வஸு; அந்தரிக்ஷஸத்;
ஹோதா வேதிஷத்; அதிதிர் துரோணஸத்;
ந்ருஸத்; வரஸத்; ரிதஸத்; வ்யோமஸத்;
அப்ஜா கோஜா ரித்ஜா அத்ரிஜா ரிதம் : "

[ஒளியில் மிதக்கும் ஹம்ஸம், நீண்ட வானிடை விளங்கும் தலைவன், வேதிகையின் ஹோதா, வீட்டின் விருந்தாளி, மன்தரிடை வாழ்வோன், சிறப்புடையவன, உண்மை ஸ்வரூபன், தூய்மயமானவன், வெற்றின, அறவோன் என்று சூரியன் புகழ் பிரகாசப்படுத்தப் படுகிறது ]

கம்பநாட்டாழ்வாரும்,

" ஒன்றென உலகிடை உலாவு மீமிசை
நின்றுநின்று உயிர் தொறும் நேடி து காக்குமே "

என ஆதவனை விமர்சனம் செய்கிறார்.

" முந்நீர்கடல் ஞாலம் முழுவதும் விளக்கும்
கதிர் ஒருங்கிருந்த காட்சிபோல " என்றும்
" விரிகதிர் பரப்பி உலக முழுது ஆண்ட
ஒருதனித் திகிரி "

என்று சிலப்பதிகாரத்திலும் ஞாயிறு போற்றப்படுகிறது.

## சமுதாயம் போற்றும் பரம்பொருள்

இயற்கையையில் இணைந்த நம் சமுதாயம் இயற்கையின் சீரிய சக்தியை எல்லாம் வழிபட்டு வந்துள்ளனர். மூவாயிரம் ஆண்டுகட்கு முன் எகிப்து பாரசீகம் முதலிய பிரதேசங்களிலும் சூர்ய வழிபாடு இருந்தது என்பது தெரி கிறது.

பாரசீகரின் தர்ம நூலான "ஜெந்த் அவெஸ்தாவிலும்" சூர்யன் தெய்வமாகப் போற்றப்படுகிறான் 'அப்பால்லோ' என்று கிரேக்கர்களும், ஹைபீரியன் என்று ரோமர்களும் மற்றவர்கள், ஹீலியாஸ், ஸால் என்றெல்லாம் பல பெயரில் ஆதவனையே வழிபட்டு வந்துள்ளனர். அதுபோலவே மத்திய ஆசியாவில் பழமையில் இருந்த கால்டீயாரே ஞாயிறை முதன் முதல் வைத்து கிழமைகளுக்கு கிரகங்களின் பெய ரைக் கொடுத்துள்ளனர்.

'பெரு' தேசத்தில் பழமைக் குடிகள் இதுபோன்றே வழி பட்டுள்ளனர். 'அஸ்டெகிஸ்' என்பார் அமெரிக்காவில் ஒரு பிரசித்தி பெற்ற சூரிய உபாசகன் என்று இன்றும் சின்னங் கள் மூலம் தெரிய வருகிறது.

---

## புராணத்தில் பகலவன்

வேத உபநிஷதங்களிலே பல இடங்களில் சூரியன் ஸ்தானம் வகிக்கிறான் கச்யபரின் பத்னிக்கு ஏழு பிள்ளைகள் என்றும் எட்டாவது சூரியனே மஹாமேருவை சுற்றி வருகிறான் என்றும் புராணம் கூறுகிறது. ஸ்வர்ணன், சரண்யு, உஷஸ் என்று திவ்யமான பெயர்களை ரிக்வேதம் இந்த சூரியனுக்கு சூட்டுகிறது.

சூரியன் பன்னிரண்டு மாதங்களிலும் 12 அம்சங்களில் உலகிற்கு அருள் பாலிக்கிறான்.

(1) விவஸ்வான், (2) அர்யமா (3) பூஷா (4) த்வஷ்டர் (5) ஸவிதா (6) பகன் (7) தாதா (8) விதாதா (9) வருணன் (10) சக்ரன் (11) உடுக்கிரமன் (12) சூரியன்.

சூரிய உபாசனையை பவிஷ்ய புராணம், பிரம்ம புராணம், வராக புராணம், மத்ஸ்ய புராணம், அக்னி புராணம், கருட புராணம், பவிஷ்யோத்தர புராணம், காளிகா புராணம், மார்க்கண்டேய புராணம் ஆகிய பழம் பெரும் நூல்கள் விதவிதமாக விவரிக்கின்றன.

சதபதப் பிரமாணம் என்ற நூல் சூரியனை சோதிப் பிழம்பு என்றும் பொன்னாரங்களாலான வட்டம் என்றும் குறிக்கிறது.

வராஹமிஹிரரின் "ப்ருஹத் ஸம்ஹிதை" பாரதம் கொண்டாடும் ஒரு புராதன நூல். அதில் சூரியனைப் பற்றிய வரலாறு பின்வருமாறு காணப்படுகிறது.

"நாஸா லலாட ஜங்கா ஊரு கண்ட
 வக்ஷாம் ஸிச உந்நதானி ரவே:
ஸூர்யாத் உதீச்ய வேஷம்
 கூடம் பாதாத் உரோயாவத்
பிப்ராண ஸ்வகாருஹை
 பாஹுப்யாம் பங்கஜே; முகுடதாரீ
குண்டல பூஷித வதன :
 ப்ரலம்பஹாரோ, வியத்கவாத:

கமலோதா த்யுதி முக!
    கஞ்சுககுப்த: ஸமிதப் ப்ரஸன்ன முக:
ரக்தோ ஜ்வல ப்ரபாமண்டலஞ்ச
    கர்து : சுபகரோ அர்த :........."

[மூக்கு, நெற்றி, இடை, துடை, கழுத்து, மார்பு யாவும் எழும்பித் திர்மையாக இருக்கவேண்டும் ரவிக்கு. வடநாட்டினர் அணியும் உடையும, காலிலிருந்து துடைவரை கவசமும் இருக்கவேண்டும், கரங்களில் தாமரை மலர்களும் தலையில் முகுடமும், காதில் குழையும் இடுப்புக் கச்சு மறைநதும், முறுவல் பூத்த வாயும், பிரசன்ன முகமும், குருதிச் சிவப்பான வட்டத்துள் நிலை கொண்டதுமாய் அருக்கனின் வடிவை அமைக்க வேணடும் ]

## நோய் நீக்கும் வைத்தியன

மற்றும் சூரிய உபாசனை நோய்கள் அகல பெரிதும் உதவுகிறது என்பதை இன்றைய மருத்துவமும் ஒப்புக் கொண்ட உண்மை. காஞ்சி மா நகரில் 'மயூரன்' என்ற கவி 'சூர்யசதகம்' என்ற துதிபாடி நல்ல பார்வை பெற்ற வரலாறும், அவர் அருளிய சூரிய சதகமும இன்றும் ஸ்ரீ கச்சபேச்வரர் கோயிலில் கல்வெட்டில உள்ளது. அங்குள்ள தீர்த்தமும் 'சூரிய தீர்த்தம்' என்ற பெயருடன் விளங்குகிறது.

திருவெண்காட்டில் உள்ள ஒரு தளமும் சூரியபகவானுக் குரியதாக காணகிறது. நேரோமயமான ரச்மிகளால் மாந்தரின உடற் கூற்றில் புனிதத் தன்மையை ஏற்படுத்தி பிணி தீர்க்கும் ஆற்றல் உடையவன் ஆதவன். வெளிநாடுகளில் (Sun Bath) சூரியனின் கிரணங்கள், தேகமெங்கும்படும்படி வெட்டவெளியில் படுப்பதை சாதாரணமாகக் கைக்கொண் டுள்ளனர்.

## சூர்ய குடும்பம்

மத்ஸ்ய புராணத்தில் ஒரு கதை: சூரியனின் மனைவி ஸம்ஞா, விச்வகர்மாவின் பெண். சூரியனுககு வைவஸ்வத மனுவும், இரட்டையராக யமனும யமுனையும் தோன்றினர். ஸம்ஞா தன் கணவனின் வெப்பம் தாங்காது பிறந்தகம் சென்றாள் தனக்குப் பிரதிநிதியாக தன் நிழலை (சாயா) வைத்துச் சென்றாள் ஒரு நாள் யமன் நிழற் பெண் சாயாவை காலால் உதைக்கப் போக, சினம் கொண்ட சாயா யமனை 'குஷ்ட நோய் அடைவாய்' என்று சபித்தாள். இதைக் கேட்டு யமன் தந்தையிடம் தெரிவிக்க சூரிய தேவன் மனைவியைக் கண்டிக்க மாமனார் வீடு சென்றார். அந்த சமயம் கணவனுடன் வாழாமல் வீடு வந்த சம்ஞாவுக்கு இடம் தர விச்வகர்மா மறுக்கவே, ஏமாற்றத்துடன் வடவாக்னி உருவில் மேரு மலையில் தவம் மேற்கொண்டாள் 'சம்ஞா'. மாமனார் வீட்டில் தேவி இல்லாதுபோகவே மேரு மலையை அடைந்து சிலகாலம் மனைவியுடன் தங்கினான்

சூரியன். அப்போது ரேவந்தனும், அச்வனி தேவர்களும் அவர்களிடை உதித்தனர்.

மருமகன் மீதும் மகள் மீதும் விரோதம கொண்ட விச்வகர்மா, சூரியனை சாணைக் கல்லில் அடைத்து ஒளியைக் குறைத்தான ஆனல், விச்வகர்மாவால் சூரியனின் கால்களை மட்டும் மறைக்க முடியவில்லை. சூரியனின சிலையிலோ சித்திரத்திலோ கால்கள் அமைத்தால் அமைத்தவன் குஷ்டரோகம் பெறுவான என்று சாபம் இட்டான் விச்வகர்மா. பேரொளியில் எஞ்சிய விசம் பங்குதான் உலகை இன்றும் உய்விக்கிறது.

*  *  *

யாக்ஞவல்க்ய மஹரிஷி சுக்ல யஜுர் வேதத்தைக் காண சூரிய உபாசனை புரிந்திருக்கிருர் ஆதித்யன அச்வ வடிவில் தோன்றி அயாதயாம வாஜஸநேயத்தைத் தந்ததாக பாகவதம் கூறுகிறது.

**சூரியனின் வாஹனம்** :—"ஸப்த யுஞ்ஜந்தி ரதமேக சக்ர மேகோ அச்வோ வஹதி நாமா" என்று வேதமும் 'பேராழி உலகனைத்தும்.........அகல் இருள் நீங்க, ஓராழிதனை நடத்தும் ஒளிச்சுடர் பரவுதுமே" என்றும், "ஒருகால் தேர்ச்செல்வன்" என்றும் ஏழு குதிரைகள் பூட்டிய ஒரு சக்கரத் தேரில சூரியன் பவனி வருவதாகக் தமிழ் இலக்கியமும் கூறுகிறது.

*　　　*　　　*

தக்ஷிணாயணம் — உத்தராயணம் என்று இரண்டு புண்ணிய காலங்களைக் கொண்டாடுகிறோம். இவை சூரியன் வடகிலிருந்து தெற்கேயும், தெற்கிலிருந்து வடகேயும் போவதைக் குறிக்கின்றன.

**நவக்ரஹம்**

சூரியனை ஜ்யோதிஷசாஸ்த்ரம் சிம்மராசிக்கு உரியவனாக வும் கிரகங்களுக்கு நாயகனாக நடுநிற்பவனுமாகக கூறுகிறது. பிதரு காரகன, ஆயுள் காரகன், ஆரோகயகாரகனாகவும் தாம்ரவர்ணமும் சதவகுணமும், சொந்த மகனான சனிககு பகைவனாகவும, கோதுமை தானியத்தில் ப்ரீதியுடையவனாக வும், கோவை டயே பருவமாகவும, பித்தத்தை உண்டுபண்ணும் தன்மையுடையவனாகவும் வர்ணிக்கிறது.

**இலக்கியத்தில் சூரியன்**

வேதம் தவிர, ஆதித்ய ஹ்ருதயம், மயூரகவியின் சூர்ய சதகம், ஸாமப பஞ்சாசிகா ஸ்தோத்ரம் அப்பய்ய தீக்ஷிதரின் ஆதித்ய ஸதோத்ர ரத்னமும் சூர்யனைப் போற்றும் சிறந்த வடமொழி நூலகள்,

**சூர்ய யந்திரம்**

சூர்ய பகவானை பஞ்சாயதன பூஜை தவிர யந்திரத்தில் அமைத்து வழிபடும் முறையை ஆகம நூல்கள் அறிவுறுத்துவ தாகத் தெரிகிறது. கங்கை கொண்ட சோழபுரத்து சிவால யத்தில் கல்லில் ஒரு 'கமல யந்திரம்' உள்ளது. இதில் சூரிய னின் உதயக்கோலம் வெகு அழகாகக் காட்டப்பட்டிருக் கிறது அற்புதமான யந்திரம் இது.

அரசர் போற்றும் ஆதித்தன்

மன்னர்கள், ஆதித்யனை உபாசிப்பதிலும், தன்னை சூர்ய வம்சம் என்று கூறிக் கொள்வதிலும் பெருமை கொண்டனர் என்று தெரிகிறது. இராமபிரானும் 'ஆதித்ய ஹ்ருதயம்' ஜபம் செய்துதான் இராவணனை வதம் செய்ததாகவும் அவர் வம்சம் சூர்ய வம்சம என்றும் அறிகிறோம். தர்மபுத்திரர் சூரியனை உபாசித்தே 'அக்ஷய பாத்திரம்' பெற்றதாகவும், குந்திக்கு சூர்ய உபாசனையால் கர்ணன் தோன்றிய கதை யும், சோழ மன்னனை பராந்தக சோழன் குடந்தை நாகேச்வர ஆலயத்துள உள்ள சூரியனின் தனிக்கோயிலுக்கு மான்யம் அளித்திருக்கிற சாசனமும, செமபை கிராமத் தில் சூரியனுக்குக் கோயில் நிறுவி, ஸ்ரீ கண்டராதித்ய ஆதித்ய காஹம் என்று பெயரிட்டு இருப்பதையும் குலோத்துங்க சோழனின் பக்தியால் விளைந்த சூர்ய நாராயணர் கோயிலும் சூர்ய ஆராதனை தொன்று தொட்டு வந்திருப்பதைக் காட்டுகின்றன.

தென் நாட்டில் சூரியனுக்கு தனியே கோயில 'சூரியனார் கோயில்' என்று தஞ்சை மாவட்டத்தில் திருவிடைமருதூர் அருகே உள்ளதுபோல் வடக்கே ஒரிஸ்ஸாவின் 'கோணரக் கில' தனிக் கோயில் உள்ளது. ஜய்பூரிலுள்ள காலவமுனி ஆச்ரமத்தில் இன்றும் மலைமீது கோயில் உள்ளது.

இவ்வாறு பாரத பூமி மட்டுமன்றி ஆதிகாலம் முதல் வேறு நாடுகளிலும கூட ஆதித்ய வழிபாடு ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பரவி யிருந்திருககிறது என்பதி லிருந்து இது ஒரு புராதன வழிபாடு என்று அறிகிறோம். தமது ஷண்மத ஸ்தாபனத்தில் சஙகர பகவத் பாதாள் சூர்ய உபாசனைக்கு இடம் அளித்து நமது ஹிந்து சமூகம் பக்தி வாழ்வு வாழ அருள் புரிந்திருக்கிறார்கள்.

# கண்டறியாதன கண்டேன்

" 'ஜய விஜயீபவ' என்று நாரதமுனி திடும் பிரவேசம் செய்யாவிடில் நமது புராணங்களில் பெரும்பாலானவை இருந்த இடத்தை விட்டு இம்மியளவும் அசைந்து கொடுத் திருக்காது. இந்த இருபதாம் நூற்றாண்டில நாம் அடிக்கடி வெள்ளித் திரையில பார்த்து ரசிக்கும புராணப் படங்களும் தோன்றியிருக்க முடியாது ஆகவே, சிக்கலான விஷயங் களைத் தெளிய வைத்து, தெய்வீக மனஸ்தாபங்களையும், சண்டை சூழ்ச்சிகளையும், சாபங்களையும், அவற்றை யொட் டிய விமோசனங்களையும் அவ்வப்போது காலதாமதமின்றி முடி போட்டு, முடி அவிழ்த்து தேவர்களிடையே ஒற்றுமை யையும், சமாதானத்தையும ஏற்படுத்திக் கொடுக்கும் நாரதர் வாழ்க என்று மனதாரச் சொல்லாத பூலோக வாசிகள் இருப்பதற்கில்லை. முக்கியமாக புராண சம்பவங் களை யொட்டிய நாடகங்களையும, திரைப்படங்களையும் கதா காலட்சேபங்களையும் சிருஷ்டி செய்து தங்கள பொருளா தாரத்தைப் பெருக்கிக் கொள்பவர்க நாரதருக்கு நன்றி செலுத்த வேண்டியவர்கள் "

ஷண்மத ஸ்தாபனம் குறித்து குழப்பமடைந்து பலவித மாக யோசித்துக் கொண்டிருந்த என் முன்பு இவ்வாறு, கூறிக் கொண்டே, தோன்றினார் நண்பர் வாசஸ்பதி. " வாருங்கள், சுவாமி! நாரதர் வருகை புராணங்களில் நன்மையாகவே முடியும் என்று சொல்வார்கள். தங்கள் வருகையைத் தாங்களே நாரதரோடு ஒப்பிட்டதிலிருந்து என் மனக் குழப்பத்தைத் தீர்க்கவேதான் தாங்கள் வந்தி ருப்பதாகத் தெரிகிறது உட்காருங்கள். ஸ்ரீ பகவத் பாதாளின் ஷண்மத ஸ்தாபனத்தின ஆறாவது அம்சமான சௌரம் பற்றி விவரங்கள் சேகரிக்கிறேன் அநேகமாகப் பூர்த்தியாகி விட்டது. ஆனால மனத்தில் ஒரு குழப்பம். அத்வைத தத்வத்தை ப்ரகடனம செய்த ஸ்ரீ சங்கரர் இவ்வா றெல்லாம பரம பொருளுக்கு கண், மூக்கு, வாய், கை என்று எல்லாம் வைத்துக் கதை கட்டியிருக்கிறாரே; உண்மைக்கு

ஏற்ப இல்லையே ! அவர் செய்தாரா, அல்லது அவர் பெய ரில் வேறு யாரேனும் செய்தார்களா என்று யோசித்துக் கொண்டிருந்தேன்: அந்த சமயம் நீங்கள் நாரதமுனி போல் தெளிவு படுத்த வந்து சேர்ந்திருக்கிறீர்கள். நான் பாக்கியசாலிதான் !'' என்றேன்.

வாசஸ்பதி வாய்விட்டு சிரிக்கத் தெரியாதவர்: என் அறியாமையை உணர்ந்து கொண்டதற்கு அடையாளமாக ஓரச் சிரிப்பு சிரித்துவிட்டுக் கூறினார்.

"புராணத்தைக் காப்பாற்ற நாரதர் வருவதுபோல், சாதாரண மனிதன் மனத்தில் உலக தத்வம், கலாசாரம், கலை சாஸ்திரம் போன்ற பெரிய விஷயங்கள் குறித்து குழப்பமும், சங்கடங்களும், நிலையற்ற தன்மையும் ஏற்படும் போது, மஹான்களும், தீர்க்க தரிசிகளும் தோன்றி மனித இனம் கடைத்தேற வழிவகைகளை வகுத்துக் கொடுக்கிறார் கள் நமது புராதனமான வைதீக மதம் மிக மிக உயர்ந்து கொடுக்கக்கூடியது எந்தத் திக்கில் யார் இருந்தாலும் ஈடு கொடுத்துக் கொண்டு இழுத்த வழிக்குச் செல்லக்கூடியது. மத சம்பந்தமான சர்ச்சைகளும், பிளவுகளும், மன மாற்றங் களும் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நிகழ்ந்து இன்று நம் தலை முறை நமது நல்வாழ்வுககு அடிகோலியுள்ள மகான் களுக்கு அஞ்சலி செய்கிறது. அவர்கள் சமூக நலனுக்காக அருமபாடுபட்டு, ஆராய்நதறிந்து அறிவுரைகளைச் செய்து மதம் சீர்கேடடையாமல் இருக்க பல்வேறு சாஸ்திர சம்பிரதாயங்களை இயற்றியுளளார்கள். ஆறறிவு படைத்த நாம் அவற்றின் தூய சகதியை இப்போது உணர்ந்து செயல் பட்டு வருகிறோம்.........ஸ்ரீ ஆதிசங்கரர் தோற்றுவித்த ஷண்மதங்களையும் (அறுவகை வழிபாடு) கடந்த வழிபாடு ஒன்று நம் நாட்டில் இருப்பதாக உஙகளால் கூற முடியுமா ?"

நான் சற்று நிதானித்தேன். கல்வி கேள்விகளில் மேம்பட்ட ஒரு அறிவாளி கேட்கும் கேள்வியல்லவா ? கேள்வியை அலசினேன். இமயம் முதல் குமரி வரை பரந்த கிடக்கும் பாரத ஹிந்து சமூகததின் பக்தி மார்க்கத்தில் மனத்தைச் செலுத்தினேன். கணபதி, முருகன், அம்பிகை

சிவன், விஷ்ணு, சூரியன் ஆகிய ஆறு தெய்வங்களில் ஏதேனும் ஒன்றின் சார்பிலேயே நமது பக்திப பெரு வெள்ளம் பாய்ந்தோடுவது புலனாயிற்று. இந்த ஆறும் தலைமைக் காரியாலயங்கள. இதன் கிளைகளாகவே மற்றவை திகழ்கின்றன. இந்த ஆறு தெய்வங்களே எல்லா சில்லறைத் தெய்வங்களுக்கும் ஆதாரமாக உள்ளன. எனக்குத் தெரிந்த சில்லறை தெய்வங்களை மனத் தராசில் தூக்கி வைத்து எடை போட்டுப் பார்த்தேன் தனிப்பட்ட முறையில் அந்தத் தெய்வங்களின் எடை நிற்கவேயில்லை. சமூகத்தை பாடாதபடுத்தும் நவக்ரகங்களை ஒவ்வொன்றாக எடுத்து தராசில வைத்தேன: செவ்வாய் முருகனோடு (கௌமாரம்) உறவு கொண்டாடினர். புதன் விஷ்ணுவிடம் அடைக்கலம குரு சிவனிடம் ஐக்கியம். எல்லாவற்றையும் ஆட்டி அழ வைக்கும் சனி சூரிய குடும்பம் இவ்வாறு நவக்ரகங்கள தங்களுக்குத் தேவைபபடும சக்தியை இந்த ஆறு தெய்வங்களில் ஏதேனும ஒன்றிடமிருந்து பெற்ற பிறகே நம்மிடம் பலப் பரீட்சை நடத்துகின்றன

---

நவக்ரஹங்களை ஒதுக்கிவிட்டு, நம் ஒன்றிப் போய் வழி படும் இஷ்ட தெய்வங்களான தர்ம சாஸ்தா, துர்க்கை, வீரபத்ரர், நரஸிம்ஹம், காளி, பகவதி, நாகராஜா போன்ற சில தெய்வாம்சங்களை சீர்தூக்கிப் பார்த்தேன் அவையும் கொடிகள் போலவே படர கொழு கொம்பு ஒன்றைப் பிடித்துக் கொண்டிருக்கின்றன.

சிறிது நேரம் மௌனமாயிருந்து சிந்தித்துவிட்டு வாசஸ்பதியிடம் என் தோல்வியை ஒப்புக்கொண்டேன். உடனே அவர், "இப்பொழுது புரிந்து கொண்டிருப்பீர்களே? ஸ்ரீ ஆதிசங்கரர் இந்த இருபதாம் நூற்றாண்டு ஹிந்து சமூக நிலையை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமது தீர்க்க த்ருஷ்டியால் பார்த்து, இன்றைய சமூகம் கடைத்தேற வகுத்துக் கொடுத்திருக்கிறார், அல்லவா?" என்று கேட்டார்.

"ஸ்ரீ சங்கர பகவத் பாதாள்தான் முதன்முதலாக இந்த ஆறு தெய்வங்களையும் நமக்கு உருவகப்படுத்திக் கொடுத்திருக்கிறாரா? ஆழ்வாராதிகள் விஷ்ணுவை வழிபட்டிருக்கிறார்கள் நாயன்மார்கள் சிவனை வழிபட்டிருக்கிறார்கள். காணுபத்யக்காரர்களின் காலத்தை நிர்ணயம செய்துள்ள சில ஆராய்ச்சியாளர்கள் அதை ஸ்ரீ ஆதிசங்கரரின் அவதார காலத்திற்கு முன்னதாகவே குறிப்பிடுகிறார்கள். இதே போல்தான் சாக்தர்களும், சூரிய, முருக உபாசகர்களும் வெகு காலமாக இருந்திருக்கிறார்கள். சரித்திர வரலாறு அவ்வாறு இருக்க ஸ்ரீ ஆதிசங்கரருக்கு மட்டும் இந்தப் பெருமையை அளிப்பது நியாயமா சொல்லுங்கள்."

வாசஸ்பதி ஒரச்சிரிப்பு சிரித்தார். "எங்கிருந்தோ ஆரம்பித்து எங்கேயோ போகிறீர்களே? ஸ்ரீ சங்கரர் காலத்தை யொட்டிய சர்ச்சைக்கு அவர் வழிவந்து, அவர் ஸ்தாபிதம் செய்த பீடங்களை அலங்கரிக்கும் மகான்களே முடிவு காணவில்லையே? பரம்பொருளில் சகல ஜீவ ராசிகளையும், சகல ஜீவராசிகளில் பரம்பொருளையும் ஒருங்கே இணைத்துப் பார்த்து அத்வைத சித்தாந்தத்தை

உலகம் புகழ தோற்றுவித்த ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் வழிவரும் மகான்களே இவ்விஷயத்தில் வேற்றுமைபட்டு சர்ச்சையை நீடிக்கும்போது நம்மைப் போன்றவர்கள் எவ் வாறு அதை நிர்ணயம் செய்ய இயலும்? ஆனால், நமது பழங்கால சரிதத்தை ஆராய்ந்து பார்த்தால் ஸ்ரீ சங்கரர் நமது வைதீக மதாசாரியர்கள் பலருக்கும் முதல்வர் என்பது தெரியவரும் இந்த உண்மையை யாரும் இதுவரை ஆட்சேபிக்கவில்லை. நாயன்மார்களுக்கும், ஆழ்வாராதி களுக்கும், காணுபத்ய சாக்தர்களுக்கும் சங்கரர் முன்ன தாகத் தோன்றியவர் என்று விபரீத சர்ச்சை செய்தால் அவர் ஸ்தாபகம் செய்த ஷண்மதங்களின் ஒற்றுமைத் தன்மையே குலைந்துவிடும். முதலில் குறிப்பிட்ட மதப் பிரிவினர் அனைவரும் பக்தி மார்க்கத்தில் பேதம் கற்பித்து அவரவர் மனம் லயித்த தெய்வத்தையே மேலானதாகப் பிர சாரம் செய்து துரதிர்ஷ்டவசமாக சமூகத்தில் பிளவை உண்

டாக்கி விட்டனர். ஸ்ரீ சங்கர பகவத்பாதாளோ, தேச மக்களின் ஒற்றுமை குன்றாதிலிருக்கவும, ஒற்றுமை வளரவும் பேதம் ஏதுமின்றி, தமது அத்வைத சித்தாந்தத்திற்கு முற்றிலும முரணான இந்த ஆறு சமய பகதிப் பாதையை உருவாககி, சமூகம சீரிய வாழககை வாழ விரும்பினார்கள். ஜீவனும் பிரமமமும் ஒன்றே என்று தத்வததைத தோற்று வித்த மகான் பரமபொருளின ஆறு அமசங்களாக ஆறு தெய்வ உருவஙகளை அமைத்துக் கொடுததார்கள் என்றால, அவர் கருததில சமூக நல்வாழ்வு நிரந்தர இடம் பெற்றிருநததை மட்டுமேதான் குறிக்கும். இன்றும்கூட நமது பகதி வாழககையில் அத்வைதிகளின் போக்கு சர்வ சமமதமாயும் பேதமினறியும இருப்பதைப் பார்க்கலாம. அத்வைதிகள வீர சைவாகளைப்போல் சிவனை மட்டும் ஆராதிப்பவர்கள் அல்ல. வீர வைஷ்ணவர்களைப் போல் விஷ்ணுவிடம் மட்டும் பக்தி பூண்டு இருப்பதில்லை. சாக்தர்களைப் போல் சகதியை மட்டும் வழிபடுபவர்கள் இல்லை...எல்லா தெய்வங்களுமே அத்வைதிகளின் மனத்தில் ஒரே மாதிரியான நிலையைததான் ஏற்படுத்திக்கொண்டிருக் கின்றன. ஆகவேதான் அத்வைதததை நிலைநாட்டிய ஸ்ரீசங்கரர் பரதத்வத்தின் சிற ப அமசங்களாக இந்த ஆறு தெய்வ வழிபாட்டு முறைகளை சீர்படுத்தி, ஒவ்வொன்றையும் தாமே ஆச்ரயிதது முதலில் மன ஒற்றுமைக்கும் பின்னர் ஜன ஒற்றுமைக்கும் அடிகோலி வைததார்கள். நமது மாபெரும் ஹிந்து சமூகத்தை அறுவகை வழிபாடு என்ற பக்தி சாஸனததால் பிணைதது என்றென்றும் ஒற்றுமை யோடு இருகக திருவுளளம கொணடார்கள்.

"இந்த உண்மையை உணராத சிலர் ஸ்ரீ சங்கரரையும், அவருடைய ஷண்மத ஸ்தாபனத்தையும கண்டனம் செயது, வேற்றுமைப் பகைமையை உணடாக்குகிறார்கள். நமது ஹிந்து மதம் மிகமிக வளைந்துகொடுக்கும் தன்மை பெற்று விட்டது. அறிவு ஆற்றல் படைத்த மனிதன் ஏறக்குறைய இரணடாயிரம் ஆணடுகளாக உல கின்கண் தோன்றியுள்ள பிரசார மதங்களின சக்தியால்

இழுக்கப்பட்டு புயலில் சிக்கிய மரக்கலம்போல் நிலைகுலைந்து தவிக்கிறான். இந்த சந்தர்ப்பத்தில் இன்றைய சமூகப் பெரியவர்களை, அறிவாளிகளை, அறிவிலிகளை எல்லோரும் ஒருமனதாக உழைகக வேண்டியவாகள். இதற்கு மாறாக இவர்கள் நமது முதாதயர் கருணைஉள்ளத்தோடு செயதருளிய சாஸ்தரங்களுக்கும், பணபு, கலாசாரங்களுககும் பேதம் கற்பித்து ப்ரசாரம் செய்வது பாரத சமுதாயத்தின் வருங்கால தலைமுறைககு கேடு விளைவிக்கும். ஸ்ரீ ஆதிசஙகரரோ, அவருககு முன்னும பின்னும் தோன்றிய தலைச்ரேஷ்டர்களோ நமது ஹிநது சமூகம செட்டலைநது அறவே அழிநது விடவேண்டும என்று கருதியிருகக மாட்டாாகள். ஆகவே, அவர்கள் நோககஙகளுக்கு இடபோதைய ஆராய்ச்சியாளர்கள் விபரீத வியாகயானம செயயாமல் இருந்தாலே போதுமானது...''

மிகவும் உணர்ச்சி வயப்பட்டவரர்க வாசஸ்பதி நீண்டதொரு பிரசங்கமே செய்துவிட்டார். ஷண்மதங்களின்

ஸ்தாபகர் ஸ்ரீ ஆதிசங்கரர்தானா? என்ற என் கேள்விக்கும் அவர் மறைமுகமாக விடையளித்து விட்டார். பெரியோர் களின் நோக்கங்களுக்கு விபரீத வியாக்கியனம் செய்யாம லிருப்பதே மேலானது என்று அவர் கூறியபிறகு என் சந்தே கத்திற்கு விளக்கம் கோர நான் விரும்பவில்லை. ஆகவே, உரையாடலை வேறு திசையில் திருப்பி, "சுவாமி, பரம் பொருள், பரப்ரும்மம் என்றெல்லாம் சொல்கிறார்கள், எழுதுகிறார்கள். அந்தப் பரம்பொருள், ஆண்பாலா, பெண் பாலா? உயர்திணையா? அஃறிணையா?...புரியவில்லையே?" என்று கேட்டேன்.

"ஆணில் பெண்ணும், பெண்ணில் ஆணும் கலந்திருப் பதை நீங்கள் சிந்தித்துப் பார்த்தால் தெரியுமே! அதே போல் ஏற்றத்தில் சமமும், தாழ்வும் அடங்கியிருப்பதையும் பார்க்கலாம். தாழ்விலும் ஏற்றமும் சமமும் அடங்கியுள் ளன. ஆகவேதான் ஸ்ரீசங்கரரின் அத்வைத சித்தாந்தம் உலக அறிஞர்கள் பலரை வசீகரிக்கிறது. காண்பதெல்லாம் மாயை: பரம்பொருள் ஒன்றேதான். அதுவேதான் மாயா ஜாலங்கள் காட்டி, ஆணாகவும், பெண்ணாகவும், புல்பூண்டா கவும் உயர்திணையாகவும், அஃறிணையாகவும் காட்சி தரு கிறது ஸ்ரீசங்கரரின் அறுவகை வழிபாட்டையே எடுத்துக் கொள்ளுங்கள். ஆணாகவும், பெண்ணாகவும் தெய்வங்கள் உருவம் பெற்று காட்சி தருகின்றன. அத்தெய்வங்களின் வாகனங்களான மூஞ்சூறு, மயில், சிம்மம், ரிஷபம், கருடன், குதிரை ஆகியவை அஃறிணையாக இருந்தும் உயர்திணை யோடு ஒன்றியிருப்பதால் அவற்றையும் வழிபடுகிறோம். சே! மாடு, ஆடு, குதிரையை அறிவு படைத்த நாம் விழுந்து வணங்குவது தவறு" என்று எந்த பக்தி உள்ளமாவது நினைக்கிறதா? ... யோசித்துப் பாருங்கள்... ஸ்ரீசங்கர ரின் ஷண்மத ஸ்தாபனம் அவருடைய அத்வைத சித்தாந் தத்திற்கு மறைமுகமாக விளக்கம் கூறுகிறது என்றும் நான் சொல்லமுடியும்..."

"சுவாமி, பொதுவாக பேசியது போதும். இப்போது என்முன் இருக்கும் விஷயம்......சௌரம் (சூரிய வழிபாடு)

இதன் சிறப்பைப் பற்றி கொஞ்சம் சொல்ல முடியுமா ?''

"சொல்வதற்கு நிறைய இருக்கிறது. ஆனால் அவகாசம் அதிகம் இல்லை—குறிப்பாக நீங்கள் சில கேள்விகள் கேட்டால் தெரிந்தவரை பதில் கூறுகிறேன்..."

"சூரியனை பூகோள சாஸ்த்ரம் ஒரு மாதிரியாக வர்ணிக்கிறது. விஞ்ஞானம் வேறு வழியில் பாடம் கூறுகிறது. வேதமும், ஜோதிஷ சாஸ்த்ரமும் வெவ்வேறு விதமாக விமர்சனம் தருகின்றன ஒரே குழப்பமாயிருக்கிறதே...!"

"குழப்பம் என்பதும் ஒருவகை இருள் அல்லவா? இருளைப் போக்கும் சக்தி ஒளியிடம் உள்ளது ஒளியளிப்பவன் சூரியன் விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் பூகோள சாஸ்த்ரம் எல்லாம் ( நமுகமாக சூரியன் ஒளியின் இருப்பிடம் என்பதில் கருத்து வேற்றுமை கொள்ளவில்லையே! அந்தமட்டில் நாம்

பிழைத்தோம்! " என்று வேடிக்கையாகச் சொல்லிவிட்டு, தொடர்ந்து பேசினர்.

"உங்கள் சந்தேகம் புரிகிறது. பூகோளம் சூரியன் நிலையாக ஒரே இடத்தில் இருப்பதாகவும், உலகம் தன்னைத் தானே சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றி வருவதாகவும் கூறுகிறது. இரவு, பகல், நாள், மாதம் வருடம் எல்லாவற்றையும் உலக மாந்தருக்கு சூரியன் ஒரே இடத்தில் இருந்து கொண்டு அளித்து வருகிறுன் என்பது பூகோள சாஸ்த்ரம் கூறும் விளக்கம். விஞ்ஞானம் சூரியன் இருப்பிடத்தையும் அவன் நடமாட்டத்தையும் பற்றி அதிகம் விவரிக்காமல், சூரியனிடமிருந்து வரும ஒளி, அதன் தன்மை, வேகம், சக்தி ஆகியவற்றை ஆராய்ந்து பல உண்மைகளை வெளியிடுகிறது வேதமோ சூரியனை ஏழு குதிரை பூட்டிய ஒரு சக்கர ரதத்

தில் அமர்த்தி பவனி வரச் செய்கிறது. ஜ்யோதிஷமோ, மாதாமாதம் சூரியனை ஒரு இடத்திலிருந்து மற்ெறாரு இடத்திற்கு மாற்றி நமது தலையெழுத்தைக் கணக்குப் போட்டுக் காட்டுகிறது. இந்த முரண்பட்ட உண்மைகளை ஆராயப் புகுந்தால், இங்கே எல்லா சாஸ்த்ரங்களையும், தத்வங்களையும் அலச வேண்டியிருக்கும்...ஒன்று மட்டும் மனத்தில் நிலையாக வைத்துக்கொண்டால், இந்த சந்தேகங்கள் தோன்றாது—"

"அது என்ன சுவாமி?...மனித ஜீவன் சந்தேகங்களின் குன்று அல்லவா? சந்தேகமும், சஞ்சலமும் இல்லாத மனம் ஒன்று இதுவரை ஜனித்திருக்கிறதா?..."

"தோன்றவில்லை — தோன்றவும் செய்யாது. ஜீவன் மாயா உலகில் நடமாடும் காலம் மிகச் சொற்பம். அது நற்கதியடைய கர்ம மார்க்கமும், பக்தி மார்க்கமும் ஊன்றுகோலாக அமைந்துவிட்டிருக்கின்றன. எங்கும் வியாபித்து, எல்லாம் ஒன்றாகி, பிரபஞ்சமே தாமாக உள்ள பரப்ருமத்தை ஜீவன் அறிவைக் கொண்டு ஆராய்வானேன்?...அப்புறம் குழம்பித் தவிப்பானேன்...? கர்மத்தையும் பக்தியையும் பெரியவர்கள் வகுத்து அளித்திருக்கும் பாதையில் சென்று, தமது தலையாய கடமையெனக் கருதி செயல்பட்டால் ஞானம் வளரும்: நாளடைவில் பெருகும் · பெருகி அது வழியும்போது பரம்பொருளாகிய சூரியனின் நிலை தெளிவாகப் புலப்படும்..."

"சுவாமி! வழக்கம்போல் இல்லாமல் இந்தமுறை தாங்கள் முற்றிலும் வேதாந்தியாகவே பேசியிருக்கிறீர்கள். இதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கவேண்டும்.. சொல்வீர்களா?"

வாசஸ்பதி சிரித்தார்: "நீங்கள் நல்ல சிந்தனையாளர்... கடந்த இரண்டு ஆண்டுகளாக நமது தமிழகத்தின் ஒளி ஸ்ரீ காமகோடி பீடம் ஆசாரிய சுவாமிகள் தெலுங்கு பிரதேசத்தில் சஞ்சாரம் செய்துகொண்டிருந்தார்கள் அல்லவா? அப்போது சூரியனுடைய தக்ஷிணாயண ஒளி தான் தமிழகத்தில் இருந்து வந்தது. இப்போது ஸ்ரீ ஆசாரியாள் திரும்ப

வும் தமிழகத்திற்கு வருகை தந்திருப்பதால் சூரியன் முழு ஒளியோடு பிரகாசிக்கத் தொடங்கி விட்டான். தாயிடமிருந்து பிரிந்த சேயின் நிலையில் இருந்த நாம் இப்போது தாயைக் கண்டுவிட்டோம். காஞ்சீபுரம் முகாமில் ஸ்ரீ ஆசாரியாளை ஆனந்தமாகத் தரிசித்துவிட்டு அவர்களுடைய அனுக்ரஹ பூர்வமான ஆசிகளோடு நடைபெறும் 'சங்கர ஷண்மத மகா நாட்டு நிகழ்ச்சிகளைக் கண்டும், கேட்டும் களிக்க ஓடி வருகிறேன் வழியில் உங்களுடைய ஞாபகம் வந்தது. உடனே இங்கு வந்தேன்...வந்த இடத்தில நீங்களும் அதே ஷண்மத ஸ்தாபனத்தை வைத்துக்கொண்டு என்னை எதிர்கொண்டழைத்தீர்கள எல்லாம் அவன் செயல். வேதாந்தியாக நான் பேசுவதன் காரணம் இப்போது தெரிந்ததா ?"

"நானும் வேதாந்தியாக மாற ஆசைப்படுகிறேன். ஆனால் சர்மமும், பசியும் என்னை விட்டகல மறுக்கின்றன. இந்த ஜன்மத்தில் ஞான மார்க்கம் எனக்கு எட்டாத பொருள்..." என்றேன்

"ஆனால் நீங்கள் ஞான சூன்யமல்ல ; ஆசாரியாளின் அருள நோக்கில் திளைப்பவராயிறறே நீங்கள்" ! என்று கூறி விட்டு வாசஸ்பதி ஷண்மத ஸ்தாபன மகாநாட்டு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள விரைந்தார்

---

# ‘இலக்கியத்தில் இனன் !’

நற்றமிழ் வல்ல நம் மூதாதையர், சான்றோர் பலரால் பாடப்பட்ட அகம், புறமான திணைகள் பற்றிய பாடல்களில் ‘தண்டியலங்காரமும்’ தொல்காப்பிய உரைப்பிரதியும் குறிப்பிடத் தக்கவை.

திருமால் உலகளக்க வளர்ந்தபோது மேல் விளங்கிய சூரியன் அப்பெருமானுக்கு கிரீடம் போலவும், திலகம் போலவும், கவுத்துவம் போலவும் இருந்தனன் என்று பொருள் படும் முதற் பாட்டுடன் தொடங்குகிறது பிறகு லக்ஷ்மிக்கு ஒப்புவுமையாக சூரியன் பாராட்டப்படுகிறான். சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களில் சூரியனை காப்புச் செய்யுள்களிலும் போற்றி வந்திருக்கின்றனர் என்பது தெரிகிறது; அவற்றில் சில பாடல்கள் இங்கே இடம் பெறுகின்றன. தமிழ்ப் பற்றுள்ளவர்களின் பாராயணத்திற்காக அவை இங்கே தொகுக்கப் பட்டிருக்கின்றன. எம்மொழிக்கும் முதல்வன் அவனன்றோ !

## பெருந் தொகை

முன்னங் குடைபோன் முடி நாயக மணிபோன்
மன்னுந் திலகம் போல் வாளிரவி—பொன்னகலந்
தங்குங் கவுத்துவம் போலுந்தித் தடமலர்போல்
அங்க ணுலகளந் தார்க்காம். 1

மேகத்தான் வெற் பானிமையான் விழுப்பனியான்
நாகத்தானீ மறைய நாட்கதிரே—யோகத்தாற்
காணாதார் நின்னை நிலையாமை கட்டுரைப்பர்
நாணாத கண்ணெனக்கு நல்கு 2

## (கொச்சக வொரு போகு)

தடங்கடற் பூத்த தாமரை மலராகி
அடங்காத முரற் சியானருமறை வண்டிசைப்ப
ஆயிர வாராழி யவிரிதழின் வெளிப்பட்ட
சேயித மெனத் தோன்றுஞ் செழும் பகலினிரவகற்றிப்
படு பனிப் பகை நீங்கப் பருவத்து மழையானே
நெடு நிலங் குளிர்கூர நீர்மைசா னிழ றூறி
அண்டங்கள் பல பயந்த வயன் முதலா மிமையோரைக்
கொண்டங்கு வெளிப்படுத்த கொள்கையை யாகலின்
ஓங்குயர் பருதியஞ் செல்வ நின்
நீங்கா வுள்ள நீங்கன் மாரெமர்க்கே.

## பெருந்தேவபாணி வகை

ஆயிரங் கதிராழி யொரு புறந்தோன் றகலத்தான்
மாயிருந் திசை சூழ வருகின்ற வரவுணர்த்த
மனக் கமல மலரினையு மலர்ந்து வான் றூறுதல்
இனக் கமல முணர்த்துவபோன் றெவ்வாயும் வாய்திறப்பக்

குடதிசையின் மறை வதூஉ மறை யென்று கொள்ளாமைக்
கடவுளர்த்த முறங்காத கண் மலரே கரிபோக
ஆரிருளும் புலப்படுப் பானவனேயென் றுலகறியப்
பாரகலத் திருள் பருகும் பருதியஞ் செல்வ கேள்!

மண்டலத் தினிடை நின்று வாங்குவார் வைப்பாராய்
விண்ட லத்திற் கடவுளரை வெவ்வேறு வழிபடுவார்
ஒங்குலக முழுது போர்த் திருவுரு வினொன்றாகி
ஆங்கவரை வேறுவேறளித் தியென் றறியாரால்;

மின்னுருவத் தாரகை நீ வெளிப்பட்ட விடியல்வாய்
நின்னுருவத் தொடுங் குதலானொடு விசும்பிற் காணுதார்
எம்மனுங் காலைவா யிடைக்கரந்து மாலைவாய்
அம்மீனை வெளிப்படுப்பாய் நீயேயென் றறியாரால்;

தவாமதியந் தொறு நிறைந்த தண்கலை கடலைத் தேய்த்
துவா மதிய நின்னொடு வந்தொன்றுகு மென்றுணரார்

தண்மதியினின் ஞெளிபுக் கிருளகற்றுந் தவற்றுந் கொல்
அம் மதியம் படைத்தாயு நீயே யென்றறியாரால்!

நீராகி நிலம்படைத்தனை; நெருப்பாகி நீர்பயந்தனை;
ஊழியிற் காற்றெழுப்பினை; ஒளிகாட்டி வெளிகாட்டினை;
கருவாயினை, விடராயினை, கதியாயினை; விதியாயினை
உருவாயினை, அருவாயினை, ஒன்றுயினை பலவாயினை
என வாங்கு;

விரிதிரைப் பெருங் கடலமிழ்தத் தன்ன
ஒரு முதற் கடவுளிற் பரவுதுந் திருவொடு
கற்றந் தழீஇக் குற்ற நீக்கித்
துன்பந் தொடரா வின்ப மெய் திக்
கூற்றுத்தலை பனிக்கு மாற்றல் சான்று
கழிபெருஞ் சிறப்பின் வழி வழி பெருகி
நன்றறி புலவர் நாப்பண்
வென்றியொடு விளங்கி மிதுகம் யாமெனவே.

சூரியன் கீழ்த்திசையில் உதித்தான்!

வேலைமடல் தாழை உள் பொதிந்த வெண்தோட்டு
மாலைத் துயின்ற மணிவண்டு—காலைக்
களி நறவம் தாதுஊதத் தோன்றிற்றே காமர்
தெளி நிற வெங்கதிரோன் தேர்.

(சிலப்பதிகாரம் புகார் காண்டம்)

# நல்வாழ்த்துக்கள்

★

திருமதி

# வேலுமணி அம்மாள்

1/8, ராமகிருஷ்ண நிலையம்,

கோயமுத்தூர்.

